Imso403

# "ஒற்றுமை"

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேராதார்."—திருக்குறள்.

புஸ்தகம் V Vol. V | 1925ஆ ஜூன்மீ | சஞ்சிகை 8 Issue 8

அருணகிரிநாதரருளிய

## பொருமுருகாற்று.



ஓம் இந்திர ரிடமுஞ் சந்திரர் வலமு
மெழுகட லதிடமும் மழுவது வலமும்
ஆசறு மயிலும் வீசிய வேலுந்
தாமரைத் தடாகமும் பூமலர்ப் பொழிலும்
பற்ம ராகமுங் கற்பகக் காவும்
வண்டமிழ் தெரியுஞ் சண்ட மாருதமும்
தவநெறிச் சைவமுஞ் சிவநெறிச் செல்வமும்
சக்கிர பாணியும் விக்கின விநாயகனும்
நலம்புரி வோனும் வலம்புரி பாகனும்
போற்றிய பொன்மை மாற்றிய மகிபனும்
எழுகடற் காசனுந் தொழுகடற் சுருதியும்
அங்கிஷத் தமணரு மெண்டிசைக் கிரியும்

பெருக்கிய வருமறை சுருக்கிய தோன்றலும்
வச்சிர வடிவு மெச்சிர வருளு
மாகத் தோன்றிய வேகத் தோருரு
வான்ற பச்சை யீன்ற சுடர்மணி
மாகதம் வயிரம் விரைசெறி கழுநீர்
நித்திலம் பவளக் கொத்துட னிலங்கச்
சொல்லவரிய கல்லகம் பதியினி
லீன்ற மேக மூன்றிய பொழிற்சூழ்
தேனமர் குழலியை வானவர் முன்னே
மணமலி செய்து பிணிபல தீர்த்துந்
தருவோன் மேனி யெரியன லாக்கி
யும்பர் பாதம் பைம்பொற் சிறடி
இந்து கணைக்கால் முந்து குறங்கு
வரிதாள் மறலி கிரிதா முந்தி
யெரிதான் வயிறு திருமா லுரோமம்
மனமே மலரோன் புவனமே யெழுச்சி
எழுத்திரு நாவில் கழுத்தினி லையன்
ஒருதோள் வசிட்ட னொருதோ ளிந்திர
னொருதோள் சந்திர னொருதோள் பார்மகள்
ஒருதோளு மகளொரு தோள் பூமகள்
ஒருதோள் சுருதி யொருதோள் பரிதி
யொருதோள் திருமா லிருதோள் சத்தரிஷியும்
வருணனு மாகப்பன்னிரு தோளு மன்னருஞ்
வோங்கிய திருக்கையில் வாங்கிய வேலு [சிறக்க
மாவலங் கொண்ட சேவலங் கொடியு
மங்கிஷ வேல்மேற் றங்கிய சூலமும்
பாசமுஞ் சங்கும் வீசிய சக்கரம்

வச்சிர மழுவாள் விற்சர மெனவே
இலங்கின திலங்கத் துலங்கின துலங்கச்
சீரேறு மெய்யி லீராறு கையுங்
கூறவரிய வாறு முகத்தினி
லொருமுக மீச னொருமுக முருத்திர
னொருமுக மாதவ னொருமுகம் வேதியன்
ஒருமுக மாதித்த னொருமுகம் விநாயகன்
பெற்ற கொற்றக் காதின்
அண்டரு மறியா வெண்டிசைபாதி
நஞ்சணி கண்டன் பிஞ்சணி பிறையன்
ஆடு பாம்பணி வேடுவர் விநாயகன்
கொன்றைச் செங்குரவன் மன்ற லெருக்கன
சேர்ந்த செஞ்சடை வாய்ந்த முடியின
னயிரொடு தோகை மயிலின் மேலேறி
ஞாலஞ் சுழல வேலுஞ் சுழற்றிக்
கால கோலம் போலத் திரியுஞ்
சூானுடலை வேறத் துணித்துக்
கணங்களும் பூதமும் வணங்கி யேத்தப்
புலித்தோ லுடுத்துப் புலிச்சென் றெடுத்து
மெய்வா ளெயிற்றுப் பைவா யரவ
மீன்ற மணியெனத் தோன்றிய சுடரே
யொப்புனக் கெதிரிலை யெப்புவி யிடத்து
முன்பா மென்ன வொருமை பூண்டு
வல்லிபாக மெல்லென அணைத்துப்
பூங்கொடி மகளிர் வீங்கிள முலைமேல்
அணைந்தும் புணர்ந்தும் மகிழ்ந்தும்
போற்றவரிய வெம் பெருமானே

கூத்தன் றந்தருள் கோமளக் குன்றே
வாங்கு மனமுந் திருவு மளியா
தாங்குங் குமார வுன தருள லதிலையே.
வருபிணியைக் காக்கு மனமிடியைப் போக்குங்
குருவருளை நல்குங் குமரன்—பொருமுனையில்
வட்டச் சுற்றக் கடலை மற்றச் சக்ரக் கிரியை
விட்டுப் பட்டுப்பறியும் வேல்.

பொருமுருகாற்று முற்றிற்று.

## நாட்டு நடப்பு.

இந்தியாவுக்கும் இந்தியமக்களுக்கும் உயிராய் விளங்கிய தேசபந்து சித்திரஞ்சன தாஸரும் தமிழ் நாட்டுக்கு ஓர் உயர்ந்த புதல்வரான திரு வ. வெ. சு. ஐயரும் நம்மை விட்டுப் பிரிந்ததைப்பற்றி வருந்துகிறோம். அவர்களுடைய சரித்திரங்களை மறுபக்கத்தில் வெளியிட்டிருக்கிறோம்.

* * * * *

வைக்கத்தில் எழுந்த சத்தியாக்கிரகம் வெற்றி பெற்றிருக்கிறது. எல்லாச் சாதியாரும் வைக்கம் கோயில் வீதியில் எவ்வித கட்டுப்பாடுமின்றி போகலாமென்று திருவாங்கூர் மகாராணியார் உத்தரவு பிறப்பித்திருக்கிறார். இந்த உத்தரவு ஹிந்துஸ்தானத்திலுள்ள 'தீண்டாமைக்கு சாவுமணி அடித்தது போலாகும்.' தீண்டாமை யென்னும் பிசாசு தொலைக்கப்பட்டது.

காங்கிரஸ் நிலைமை மிகவும் பரிதாபகரமானதாயிருக்கிறது. ஒரு வகுப்பார் இந்திய மந்திரி பர்க்கென்ஹெட்டின் பிரசங்கங்களுக்குக் குறை கூறுவதில் காலத்தைக் கழிக்கிறார்கள். மற்றொரு வகுப்பார் மகாத்மாவைத் திட்டுவதோடு அவருடைய நிர்மாணத் திட்டத்தைக் கேலி செய்கிறார்கள். பெஸன்ட் தாஸர்கள் தங்கள் சுயராஜ்ஜியத் திட்டத்தைப் பற்றிப் பெருமை பேசுவதிலும் காலத்தை வீணாக்குகிறார்கள். செயலற்றுக் கிடந்த மிதவாதிகள் தங்கள் கொள்கை மேலானதென்று கர்ச்சிக்கின்றனர். இன்னொரு வகுப்பார் இன்னது செய்வதென்று தெரியாமல் திகைக்கின்றனர். ஆகவே தேசத்தில் ஜனங்களுக்குள் ஒற்றுமையில்லை. ஒற்றுமைப்பட்டு வேலை செய்தாலொழிய பலனில்லை. சர்வ கட்சிகளுக்குள்ளும் சமாசம் ஏற்பட்டாலொழிய நாட்டிற்கு விமோசனம் ஏற்படாது.

* * * * *

தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியர்களின் கஷ்டங்களை நிவர்த்தி செய்ய வேண்டுமென்ற எண்ணம் பிரிட்டிஷ் சர்க்காருக்கு உதித்திருக்கிறதுபோல் தெரிகிறது. இங்கிலாந்து தென்னாப்பிரிக்கா ஹிந்துஸ்தானம் ஆகிய இம்மூன்று தேசங்களின் பிரதிநிதிகளும் அடங்கிய ஒரு மகாநாட்டைக் கூட்டப் போவதாகத் தெரிகிறது. நம் சகோதரர்களின் கஷ்டம் நீங்கிவிடுமென்று எதிர்பார்க்கிறோம்.

* * * * *

பர்மாவில் கப்பல் மூலமாய் வந்திறங்கும் ஒவ்வொரு இந்திய ஆணும் பெண்ணும் 5 ரூபாய் கொடுக்கவேண்டுமென்றும் குற்றஞ் செய்த இந்தியர்களை பர்மாவைவிட்டு அப்புறப்படுத்தவேண்டுமென்றும் இரண்டு மசோதாக்கள் பர்மா சட்டசபையில் நிறைவேறி யிருக்கின்றன. பர்மா ஹிந்துஸ்தானத்தின் ஒரு பாகமாயிருந்தும் பர்மியருக்கும் இந்தியர்களுக்கும் ஒற்றுமையில்லாததால் பர்மாவிலுள்ள இந்தியர்கள் கஷ்டப்படுகிறார்கள். பின்னால் பர்மியர்கள் துன்பப்படுவார்கள். இது உண்மை.

'ஒன்று பட்டால் உண்டு வாழ்வே' என்றார் பாரதியார். உதாரணம்: மொராக்கோவிலுள்ள ரிப்கள் என்னும் முஸ்லிம்கள் பல ஆண்டுகளாகச் சீர் கேடடைந்துவரும் ஸ்பானியத் துரைத்தனத்தை எதிர்த்து வெற்றிமேல் வெற்றி அடைந்து ஸ்பானியர்களின் ஆதிக்கத்தை உதறித்தள்ளினர். பின் அவர்கள் பிரென்சுக்காரர்களின் ஆதிக்கத்துக்குட்பட்ட பிரதேசத்தின் எல்லைப் புறத்தையும் ஆக்கிரமித்து வருகின்றனர். ஏற்கனவே ஒரு வெள்ளைக்கார அரசாங்கம் கீழ் நாட்டு ஜாதியினரால் தோற்கடிக்கப்படுவதைப் பொறுக்க முடியாமல், வெள்ளையர்களெல்லாம் ஒன்றுசேர்ந்து ஸ்பெயினுக்கு ஆதரவளிக்கவேண்டுமென்று பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் கூறிவந்தனர். வெள்ளையர்களுக்கிருக்கும் ஒற்றுமை நம் இந்தியர்களுக்கிருப்பின் சுயராஜ்ஜியம்வர வெகுநாட் செல்லுமோ?

* * * * *

தேவஸ்தான பரிபாலனச் சட்டம் அமுலுக்கு வந்ததும் ஒரு பேருபகாரமான காரியத்தை அச்சட்டத்தின் கீழ் பனகால் ராஜா செய்ய முன்வந்தது பாராட்டத்தக்கது. திருப்பதி தேவஸ்தானத்திற்கு வருஷம் ஒன்றுக்கு சுமார் 17 லக்ஷம் ரூபாய் வருமானம் வருகிறதாம். அதில் சுமார் 8 லக்ஷம் ரூபாய் செலவாகிறது. செலவு போக மீதியிருக்கும் 9 லக்ஷம் ரூபாயைக் கொண்டு திருப்பதி வெங்கடேஸ்வர் பெயரால் ஒரு ஹிந்து சர்வ கலாசாலை யொன்றை ஏற்படுத்த பனகால் ராஜா தீர்மானித்திருக்கிறார். இது ஒரு சிறந்த யோசனைதான்.

* * * * *

சீன தேசத்தில் நிலைமை மிகவும நெருக்கடியாயிருக்கிறது. அமெரிக்கா, ஜெர்மனி, பிரான்ஸ் இங்கிலாந்து இவையெல்லாம் சீனாவில் ஆதிக்கம் புரிந்து வருகின்றனர். சீனர்கள் வெள்ளையர்களைத் துவேஷிக்கின்றனர். (ப-ர்).

# ஆசிரிய இலட்சணம்.

## THE ESSENTIALS OF A GOOD TEACHER.

ஆசிரியர் தம்மையடுத்த மாணாக்கர்க்குக் கல்வி கற்பித்தலாகிய தங் தொழிலைத் திறம்பெறச் செய்து முடித்தற்கு அவர் பால் இன்றியமையாது இருக்கவேண்டிய குணங்கள் சிலவுள. அவையாவன :—

1. கல்வி கற்பித்தலைப்பற்றிய சரியான மனப்பான்மை.
2. கற்பிக்கும் முறையறிந் தொழுகுதல்.
3. கற்பிக்கப்படும் விஷயங்களை அறிந்திருத்தல.
4. கற்பிக்கும் வன்மை.
5. மாணாக்கரின் திறமைகளையுந் தேர்ச்சிகளையும் அளவிட்டு அறியும் வன்மை.
6. சுகாதார விதிகளையறிந்து கைக்கொண்டொழுகல்.
7. கல்விக்குக் காரணர்களாய ஏனையோர்பாற் கொண்டுள சரியான மனப்பான்மை.
8. நல்லொழுக்கம் என்பனவாம்.

1. கற்பித்தலைப்பற்றிய சரியான மனப்பான்மை. கற்பிக்கும் ஆவலினால் உந்தப்பெற்ற மனமுடைய ஆசிரியரே தங்காரியத்தில் சித்தி பெறுபவராவர். கற்பித்தலின் நோக்கமானது தம்மைப்போல் மக்களுடம்பெடுத்த இன்னோருயிர் தனக்கேன்ற ஆற்றன் முழுதும் பெற்று விளக்கமுறும்படி

அதற்குத் துணைபுரிதன் மாத்திரையே யென்றும் தம் மாணுக்கரின் சுய ஆற்றல் பிரகாசமுற்று வளர்தற்கு உதவி யாகத் தம்மாலேற்றனவெல்லாம் இயற்றுதலேயென்றும், ஆசிரியராவார் எத்துணைத் தெளிவாக விளங்கிக் கொள்ளு கின்றனரோ அத்துணையளவிற்குத், தாஞ் செய்பணி ஒத் துழைப்பின்பாற்படுவதொன்று எனவும் அதற்குச் சிறந்த சாதனமாயுள்ளது அன்பேயன்றி ஆணை (அதிகாரம்) யன் றெனவுந் தெளிவாக அறிந்துகொள்வர்.

பண்டைக்காலத்தார் சிலரின் கொள்கைப்படி, கொள் கலன்கள்போல் வாளாகிடக்கு மனத்தினர்க்கு (=மாணுக் கர்க்கு) அறிவைப் புகுத்துதலும், தம்மைத்தாமே யடக்கி யாளும் வன்மையற்ற சிறுவர்களைத் தம் ஆணையினுலடக்கி நடத்துதலுமே ஆசிரிய இலக்கணங்களாகக் கருதப்பட்டு வந்தன. இக்காலத்துக் கொள்கைப்படியோவெனின், ஆசி ரியரென்பார் உடனின்று துணைபுரிபவரேயன்றி எசமானர் அல்லர் ; ஏற்ற நல்லுரை பகர்ந்து நெறிப்படுத்தும் நண் பரேயன்றி ஆணை வழி நடத்தும் அதிகாரியல்லர், என் றுணர்க. பழைய முறையின் வண்ணம் மாணுக்கர் தாமா கவே சிந்திக்கவும் தஞ்சிந்தனைக்கெட்டிய எண்ணங்களைத் தாராளமாக வெளிப்படுத்தவும் இடம் பெற்றிலர். இக்கால நன்முறை பற்றியொழுகும் உபாத்தியாயரோவெனின், மாணுக்கரும் அறிவுடை மக்கட்பொருளேயென அவர் தன்மையை நன்குமதித்தும், சாதுரியமாயும் அன்பாயும் அவர் தமை நடத்தியும், மாணுக்கர் தாமாகவே தம் இயல்பு கொண்டு எவற்றையுஞ் செய்யும் வழிகளெல்லாஞ் சூழ்ந் தும், இனிமைபெறத் தம்வினையாற்றுவர். அவர் கற்பிக்கும் முறையும் பெரும்பான்மையும் நேரே சொல்லிக்கொடுப்ப

தாயிராது மாணுக்கர் சிந்தித்து அறியச் செய்யும் பான்மைத்தாயிருக்கும். கசடறக் கற்கும்பொருட்டு அவரியற்றும் ஏற்பாடுகளும் காலமிடங்களுக்கிசைய மாற்றக்கூடியனவேயன்றி மாற்றக்கூடாத கடுமைவாய்ந்தனவன்று. சுருங்கச்சொல்லின் உபாத்தியாயர் கட்டாயப்படுத்திச் செய்விக்குங் குணமுடையராகலாம் இன்றேல் உடனின்று துணைபுரியுங் குணமுடையராகலாம், தம் அதிகாரத்தால் ஆளலாம் இன்றேல் அன்பு காட்டி நடத்தலாம்.

2. கற்பிக்கும் முறையறிந்தொழுகல். ஆசிரியத்தொழிலாளர்க்குக் கிடைக்கும் ஊதியம் சுருக்கமாயிருத்தற்கும் அத்தொழில் மிக்க நன்குமதிப்பினைப் பெருதிருத்தற்கும் உற்ற காரணங்களுள் ஒன்ருகக் கூறத்தக்கது. ஆசிரியத் தொழிலிற் புகுவோரிற் பெரும்பாலார் கற்பித்தலைப்பற்றிய விதியறிவு (Theory) ஒரு சிறிதும் பொருந்தப் பெருராயிருத்தலேயென்பது. கற்பித்தலைப்பற்றிய அறிவு தழைத்துப் பெருங்களஞ்சியமாகப் பொலிவடைந்திருப்பது இக்காலம். அவ்வறிவையெல்லாம் பெற முயலாது புறக்கணித்துவிடல் எந்த ஆசிரியர்க்கும்-கருவில் திருவுடையாசிரியர்க்கெனினும்-ஒல்லுவதன்று. தந்தொழில் பற்றிய சாத்திரத்தின் முற்போக்கினை யனுசரித்துத் தம் அறிவும் வளர்ச்சியுறற்பொருட்டு ஆசிரியராவார் காலந்தோறும் வெளிவரும் கல்வி நூல்களைப் படித்துவரல் வேண்டும்; கல்விச் சங்கம் ஆசிரியர் சங்கம் என்பவற்றில் அங்கத்தவராய்ச் சேரல் வேண்டும்; விடுமுறைகாலங்களில் ஏற்படுத்தப்படும் பாட உபந்நியாச கூட்டங்களிலுஞ் சேர்ந்து பயிலல் வேண்டும்.

தொகுத்துக் கூறுங்கால், கற்பிக்கும் விதி நூலறிவைப் பற்றி உபாத்தியாயரின் மனஎண்ணம் தாமறியவேண்டுவ வெல்லாமுற்று விட்டேமென நிலைப்பட்டு வளர்ச்சிகுன்றி யிருக்கலாம்! இன்றேல் கற்பித்தலைப்பற்றி மேன்மேலும் அறிவைப்பெற ஆவலுற்று வளர்வதாயிருக்கலாமென்பது.

3. கற்பிக்கப்படும் விஷயங்களை யறிந்திருத்தல். ஆசிரியர் தாங் கற்பிக்கப்புகும் விஷயங்களை நன்கு அறிந்திருத்தல் மிக அவசியம் என்பதை அதிகமாக எடுத்துக் கூறல் வேண்டா. எனினும் தம் மாணுக்கரைப் பார்க்கிலும் விஷய அறிவில் ஒரு பக்கம் (புத்தகத்திலுள்ள பக்கம்) மாத்திரம் முந்தி நிற்கும் ஆசிரியரும் உளரென்க. படிப்பிக்கப்புகும் விஷயத்தைப்பற்றிய அறிவு புத்தகப்படிப்பாக மாத்திர மிருத்தல் சாலாது! மற்று, உலகவாழ்க்கைக்குரிய முயற்சிகளின் சார்புபற்றியதா யிருக்கற்பால தென்றுணர்க. இனி மேல் உபாத்தியாயர் நூல் பல கற்றபண்டிதராக மாத்திர மிருந்துவிட முடியாது. உலகசீவியமென்னும் நாடகத்திற் கலந்து துணைபுரிபவருமாக வேண்டுமென்க. விஷயங்களைப் பற்றிய ஆழமான அறிவு படைத்திருத்தலே உபாத்தியாயர்க்குப் போதுமானது என முன்னொரு காலத்து எண்ணியிருந்தது இப்போது செல்லாது; என்னை, விஷய விளக்கம் சாலப்படைத்துள்ள உபாத்தியாயரும் நல்லாசிரியராகாதுபோதல் அனுபவத்திற் காணப்படுதலினென்க. ஒரு விஷயத்தைப்பற்றி மாத்திரம் அறிவதோடமையாது அதனோடு தொடர்புடைய பலவற்றையுமாராய்ந்துகொண்டு போதல் வேண்டும். அதனல் அவ்விஷயத்தைப் பற்றிய அறிவு வளரும். அது செய்யாத வழி வளர்ச்சி குன்றுமென்க.

4. கற்பிக்கும் வன்மை. ஆசிரியராவார் தந்தொழிற்குரிய விதியறிவு (Theory) சாதனையறிவு (=செயலறிவு Practice) என்னும் இரண்டிலுந் தேர்ந்தவராதல் வேண்டும். எவ்வாறு நீராவி யந்திரத்தின் அமைப்பு விதிகளை அறிந்த மாத்திரத்தில் ஒருவர் அதனை ஒட்ட முடியாதோ, அஃதுபோலக் கற்பித்தலைப்பற்றி விதிகளை மாத்திரம் நிரம்பக் கற்றுள்ள ஒருபாத்தியாயரும் திறம்பெறக் கற்பிக்கும் நல்லாசிரியராகாதுபோதல் கூடுமென்க. ஆசிரியத்தொழிலில் வன்மைபெறுதற்குச் சாதனையிற் பல்காலும் பயின்றுவருதல் இன்றியமையாததென்பது. எத்தனை உபந்நியாசங்களைக் கேட்டாலும், எத்தனை புத்தகங்களை வாசித்தாலும், சாதனை செய்து திறமைபெறாதவன் நல்லாசிரியனாக வருவது மிக அரிது. இதற்குமாறாய், கற்பித்தலில் நிபுணனென்று பேரெடுத்தோனும் அதைப்பற்றிய விதியறிவு பொருந்தப்பெறானாயின் கற்பிக்கும் வித்தை நன்கு கைவரப்பெற்றானென மதிக்கப்படற் குரியனல்லனென்றுணர்க. இங்ஙனமாக; நல்லாசிரியனாவான் மற்றியாவனெனின், விதிகளைக் கற்றும் சாதனைவழியால் அனுபவம் வாய்ந்தும் உள்ளவனேயென்க. சுருங்கச் சொல்லில் ஆசிரியராகவரவேண்டுபவர் போதனாவிதிகளை யறிதலோடு செய்கையில் பயிற்றப்படுதலும் வேண்டும் என்றுணர்க.

ஆசிரியர் போதினி.

---

## ந ட ரா ஜ வ டி வ ம்.

### தில்லைத் திருநடனம்



(அடுத்த பக்கம் பார்க்க).

" டுடில் "

இடம்:—விசேஷ பணமுண்டைய நோயாளியின் படுக்கை யறை.

மனைவி:—டாக்டரே! கொஞ்சநாளாக எங்க வீட்டுக்காரருக்கு சோறே வேண்டியதில்லை. பசியென்பதே கிடையாது. நீங்கள் கொஞ்சம் கையைப் பாருங்கள்.

குடும்பவைத்தியர்:—அப்படியா? அம்மா! மனசுக்கு வருத்தமா யிருக்கிறது. காலையில் அவர் என்ன சாப்பிட்டார்?

மனைவி:—வழக்கமாய்ச் சாப்பிடுகிறதில் பாதிகூடச் சாப்பிடவில்லை.

வைத்தியர்:—அப்படியா? அவர் வழக்கமாய் சாப்பிடுகிறது எனக்குத் தெரியும். ஆனாலும் அவர் வழக்கமாய் என்னென்ன சாப்பிடுவார்? கொஞ்சம் சொல்லுங்கள்.

மனைவி:—தோசையில் குறைந்தது பத்துப் பன்னிரண்டு. சுடச்சுட இருந்தால் இருபது இருபத்தைந்து வடை சாப்பிடுவார். நாட்டுக் கோதுமை ரவை உப்புமா கிண்டி வைத்தால் கொஞ்சம் அரைப்படி ரவையாவது சாப்பிடுவார். வாழைப்பழம் என்றால் ரொம்பப் பிரியம் அவருக்கு. இருபது முப்பது பழமாவது உரித்துப்போடுவார். இரண்டுபடி கூசாவில் ஒருகூசா காப்பியாவது|குடிப்பார். வேறு ஏதாவது பண்டம் பலகாரமிருந்தால் கொஞ்சம் சாப்பிடுவார். இன்னொருத்தியா யிருந்தால் இதெல்லாம் உங்களிடத்தில் சொல்லமாட்டாள். ஏன் என்றால் திருஷ்டி போட்டு விடுவார் என்று பயந்து.

வைத்தியர்:—அம்மா! இது ஒரு பெரிய கேசு. ஆனால் உயிருக்கு மோசமில்லை. பிழைத்து விடுவார். ஆனால் நாட் செல்லும். வைத்தியம் ரொம்பப் பார்க்க வேண்டும். சாதாரண கேஸ் இல்லை. எட்டு ஆள் வேலையை அவர் செய்துகொண்டு வந்திருக்கிறார். கொஞ்சம் இளைப்பாறவேணும். ஒருவருஷமாவது ஆகும். இப்பொழுது சாப்பிடுவது போதும். கொஞ்சநாள் இப்படியே சாப்பிடட்டும்.

# பூகம்பங்கள்.

## VOLCANOES CAUSES.



[ஸ்ரீமான் பி. எஸ். சுந்தரம் B.A. (Hons.)]

இயற்கை தேவியின் பயங்கரத் திருவிளையாடல்களால் மானிடருக்கு உண்டாகும் கஷ்டங்கள் பலவாகும். சென்ற இரண்டு வருஷங்களாக, அதிசயமான வெள்ளப் பெருக்குகளாலும், புயல்காற்றுக்களாலும் நமது பாரதநாட்டில் அளவிலாத் துன்பங்கள் விளைந்தன என்பது அனைவரும் அறிந்த விஷயம். இவையெல்லாம் அற்பமெனக் கருதும் படி இரண்டு வருஷங்களுக்கு முன்னர் நினைக்க நடுங்கச் செய்யும் அபூர்வமான பூகம்பமொன்று, ஜப்பான் தேசத்தைப் பெருங் கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாக்கி, அதன் முன்னேற்றத்திற்கு இடையூறாக நின்றதென்பது அநேகருக்கு ஞாபகமாயிருக்கும். இம்மாதிரிப் பூகம்பங்கள் இவ்வுலகில் அடிக்கடி வெவ்வேறிடங்களிற் தோன்றி நாடு நகரங்களை அழித்ததாகச் சரித்திரங்களிற் படிக்கிறோம். சில தினங்களுக்கு முன்பு கெனியாவிலும், நமது நாட்டிலேயே தில்லி முதலிய இடங்களிலும் பூகம்ப அதிர்ச்சிகள் நேரிட்டதாகப் பத்திரிகைகளில் வெளியாயிருந்தது. இன்னும், வருங்காலத்தில் பெரும் பூகம்பங்கள் ஏற்பட்டு நாடுகள் பலவற்றை அழித்துவிடுமென்று சோதிடங்கள் பிரசுரிக்கப் பட்டிருந்தன. 'பூகம்பங்கள்' என்ற தலைப்பைப் பார்த்து நானும் அத்தகைய சோதிடம் எதுவேனும் கூறப்போகி

றேனேவென்று எவரும் அஞ்சவேண்டாம். சோதிடம் கூறும் வேலையைப் பிறருக்கு விடுத்து, பூகம்பங்களின் தன்மையைப்பற்றியும், அவைகள் ஏற்படுவதற்கான காரணங்களைப்பற்றியும் மட்டும் இச்சிறு கட்டுரையில் ஆராய உத்தேசித்திருக்கிறேன்.

சில பூகம்பங்கள், ஒன்று முதல் பத்துப் பதினைந்து விநாடிவரை நீடித்துப் பூமியை மெதுவாய் அசைத்து அதிக சேதம் உண்டு பண்ணாமல் பிறகு மறைகின்றன. இன்னும் சில நமக்குப் புலனாகாமல் அவைகளைக் கண்டு பிடிப்பதற்கென்று ஏற்பட்ட கருவிகளால் மட்டும் அறியப்படுகின்றன. எரிமலைகள் பூகம்பங்கள் அவ்வளவு திடீரென்றும், நிச்சயமாகவும் தீங்கு செய்யாவிடினும், சில சமயங்களில் கிராமங்களையும், நகரங்களையும் அழித்துவிடும் வல்லமை பெற்றிருக்கின்றன. எரிமலைகளுக்கும் சிலவகைப் பூகம்பங்களுக்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு. பூகம்பங்களும் எரிமலைகளும் எப்படி உண்டாகின்றன என்பதைச் சிறிது விளக்கிக் காட்டுவோம்.

பூமியின் கர்ப்பத்திலுள்ள வெப்பம், சமுத்திரம், வாயுக்கள் இவையே பூகம்பங்களுக்கும் எரிமலைகளுக்கும் முக்கிய காரணங்கள். இஃதெவ்வாறென்று அறியப் பூமியின் தன்மையைப்பற்றிச் சிறிது தெரிந்துகொள்வது அவசியம். பூமியினுள்ளே போகப்போக உஷ்ணம் அதிகரிக்கின்றது. ஏறக்குறைய 50 அல்லது 55 அடி கீழே தோண்டினால் அங்கு உஷ்ணம் சராசரி 1 டிக்கிரி (பாரன்கீட்) அதிகமாயிருக்கிறது. 9000 அடிக்குக் கீழே தண்ணீரைச் சாதாரணமாய்க் கொதிக்கச் செய்யும் வெப்பமும், 28 மைலுக்

குக் கீழ்ப் பாறைக் கற்களையும் உருகச் செய்யும் வெப்பமு மிருந்துவருகிறது.

நிற்க, சமுத்திரத்திற் சிற்சிலவிடங்களில் 5, 6 மைல் ஆழமிருக்குமென்பது நமக்குத் தெரிந்த விஷயம். இருபது புத்தகங்களை ஒன்றின்மேலொன்றாய் அடுக்கியிருந்தால், மேலேயிருந்து ஐந்தாவது புத்தகத்தை உருவி எடுப்பதைப் பார்க்கிலும், பத்தாவது புத்தகத்தை அப்படி எடுப்பது சிரமமாயிருக்கும். ஏனென்றால், முதலில் நான்கு புத்தகத்தின் கனம் மாத்திரம் நாம் எடுக்கும் புத்தகத்தின்மேல் பொறுத்தது. ஆனால் இரண்டாந் தடவையில் ஒன்பது புத்தகத்தின் கனம் பொறுத்தது. இம்மாதிரியே எல்லாவற்றிற்கும் அடியிலுள்ள புத்தகத்தை உருவி எடுப்பது மிகவுஞ் சிரமமாயிருக்கும். சமுத்திர ஜலமும் இவ்விதம் தட்டுத்தட்டாயிருப்பதாக நினைத்துக்கொள்வோமானால் சமுத்திரத்தின் ஆழமான இடங்களிற் தரையைத் தொட்டுக் கொண்டிருக்கும் ஜலத்தட்டின்மீது 6 மைல் ஆழமுள்ள ஜலத்தின் கனம் பொறுக்கும். அவ்விடத்தில் கல், இரும்பு முதலிய கடினமான பொருள் எதுவும் புகையிரதப்பாதையில் நசுக்குண்டு விரிபட்ட தம்படியைப்போல் தகடாக ஆகிவிடும். ஆழமான சமுத்திரத்தில் முழுகும் கப்பல்களும் மற்றச் சாமான்களும் தரையைப் போய்ச் சேராது ஜலத்தின் நடுமத்தியிலேயே அதனதன் கனத்துக்கு ஒத்தபடி மிதந்து கிடக்கும்.

இவ்வாறாக, மிகவும் ஆழமான இடங்களில் சமுத்திரத்தின் கீழுள்ள தரைமேல் அதிக கனம் தாக்கி மெள்ள மெள்ளச் சமுத்திர ஜலம் பூமிக்குள் பிரவேசிக்கிறது. பிரவேசிக்குங்கால் பூமிச் சூட்டினால் நீராவியாக்கப்பட்டது

போக மீந்த ஜலம் வெகுதூரம் 2,502 மைல் வரை எட்டு கிறது; அங்கு நீராவியாக மாற்றப்படுகிறது. ஒரு குடம் ஜலத்தை நீராவியாக்கினுல், அந்நீராவி வேறு சக்தியினுல் அமுக்கப்படாவிடின் முன் குடத்தைப்போல் 1700 மடங்கு அளவுள்ளதாகும். அதை அக்குடத்திற்குள்ளேயே அடைக்கவேண்டுமானுல் மிகவும் அபாரமான சக்தியை உபயோகிக்கவேண்டியிருக்கும். இப்படி அடைபட்ட நீரா விக்கு ஏராளமான தள்ளும் சக்தி (Pressure) ஏற்படுகி றது. இச்சக்தியை உபயோகப்படுத்தியே இக்காலத்தில் புகைவண்டிகள் ஓடுகின்றன. மேற்சொன்ன விதமாகப் பூமியின் உட்புறத்தையடையும் ஜலம் நீராவியானதும் அது பாவுவதற்கு அங்கு வேண்டிய இடமில்லாததால் அபரிமித மான தள்ளும் சக்தியைப்பெற்று அங்குமிங்கும் முட்டி, எப்பொழுது வெளியடைந்து சுயேச்சைபெறலாமெனத் திரிகின்றது.

சில சமயங்களில் சமுத்திரத்தின் அடியில் பூகம்பங் கள் ஏற்படுவதுண்டு. அப்போது சமுத்திரத்தின் கீழுள்ள தரை வெடித்துச் சமுத்திர ஜலம் பிரவாகமாய்ப் பூமியின் பாதாளத்தை யடையும். இந்த ஜலமும் நீராவியாகி முன் னுள்ள நீராவியுடன் சேர்ந்து அதிக தள்ளும் சக்தியைப் பெறுகிறது. இவ்வாறு மொத்த சக்தி அதிகமாகப் பெற்ற நீராவியானது, பூமியில் கெட்டிப்படாததும் இச்சக்தியை எதிர்க்கும் தன்மையற்றதுமான பிரதேசங்களில் துவாரம் செய்துகொண்டு சுயேச்சை கிடைக்குமிடமான பூமியின் மேல் தரைக்கு வந்து விடுகிறது. அப்படி வருங்கால் வரும் வேகத்தினுல் அந்நீராவி கீழே கொதித்துக் கொண் டிருக்கும். தீக் குழப்பமான உருகிய பாறைகளையும், தீயி

னும் மிக்க வெப்பம் பொருந்திய வாயுக்களையும் அடித்துக் கொண்டு வந்து அத்துவாரத்தின் வழியாகக் கக்குகிறது. இதுதான் எரிமலையின் ஆரம்பம். நாளடைவில் உருகிய பாறைகள் குளிர்ந்து சேர்ந்து சேர்ந்து பெரிய மலையாய் விடுகின்றது. இதுதான் எரிமலை. இப்படியாக எரிமலைகள் பூமியின் உள்ளுக்கும் வெளிப்புறத்திற்கும் சம்பந்தமான ஒரு துவாரம் பண்ணி விடுகின்றன. புகைவண்டியில் எப் படி நீராவி அளவுக்கு மிஞ்சியவுடன் தனியே பந்தோபஸ் துக்குழாய் (Safety Valve) வழியாகப் போய்விடுகிறதோ, அப்படியே பூமியினுள் உள்ள நீராவியும் அதிக சக்தி யடைந்தவுடன் எரிமலையின் துவாரக்கண் மூலமாய் வெளி யடையும். சிற்சில சமயங்களில் இந்நீராவிக்கு முன்சொன் னபடி எளிதான போக்குமிராது. அச்சமயங்களில் பூமி யின் உட்புறத்திலேயே ஒரு பாகம் அமுங்கிச் சரிவதன் மூலமாக நீராவிக்கு முன்னைவிட அதிகமாய்ப் பாவுவதற்கு இடங்கிடைக்கும். அவ்விதம் பூமி சரியுங்கால் பூமி அதிர்ந்து பூகம்பம் உண்டாகும்.

கீழே ஏற்படும் சரிவினால் நமக்கும் நம்மைச் சுற்றி யுள்ள விடங்களிலும் அதிர்ச்சி ஏற்படுவதேன் என்பதைக் கவனிப்போம். ஒரு அறையின் உத்திரத்தினின்றும் ஒரு விசைக்கம்பி (Spring) தொங்குவதாகவும் அதன் கீழ் நுனி யில் ஒரு சிறு கல் கட்டித் தொங்கவிட்டிருப்பதாகவும் நினைத் துக்கொள்ளுவோம். அஃது அசைவற நிற்குங்கால் நமது ஒரு விரலினால் கல்லைக் கீழ் நோக்கித் தட்டினால் என்ன நடக்கும்? ஒரு நீளமான தாம்புக் கயிற்றின் நுனியை அலைத்தால், எப்படி அலைகள் வடிவமாக அந்த அதிர்ச்சி கயிற்றின்வழியே போகின்றதோ, அப்படியே கீழே தட்

டினதால் உண்டாகும் அதிர்ச்சி, அலைகள் ரூபமாகக் கம்பி யின் நுனியையடைந்து அங்குப் பிரதிபலிக்கப்பட்டுத் திரும்பவும் அலைரூபமாகக் கல்லிடம் வரும். கல் மேலும் கீழுமாக அலையும். அதேமாதிரி அக்கம்பியின் ஒவ்வொரு பாகமும் கல்லினின்றும் அதனதன் தூரத்திற்கொத்தபடி மேலும் கீழும் அலையும். ஆக, கல்லை நாம் கீழ்நோக்கித் தட்டுதலானது அக்கல்லும், கம்பியின் பாகங்களும் மேலும் கீழுமாக அலைவதற்குக் காரணமாகிறது. இரும்புக் கம்பிக்குப் பதிலாக ஒரு ரப்பர்த் துண்டைத் தொங்கவிட்டிருந்தாலும் இம்மாதிரியே கல் மேலும் கீழும் ஆடும். கல் மேலும் கீழும் அலைவதற்குக் காரணம், இரும்பும் ரப்பரும் தங்கள் வடிவத்தையும் அளவையும் மாற்றக்கூடிய எதையும் எதிர்க்கும் தன்மையுடையனவாயிருப்பதாற்றான். இப்படியே, தன் வடிவத்தையும் அளவையும் மாற்றக்கூடிய எந்தச் சக்தியையும் எதிர்க்குங் குணம் பூமிக்கும் இருப்பதால், பூமியினுள்ளே சரிவு உண்டாகும்போது பூமியின் வழியாக அதிர்ச்சி அலைகள் ஓடுகின்றன. மேல் சொன்ன உதாரணத்தில் அதிர்ச்சி அலைகள் மேலும் கீழுமே சென்றன. பூமியில் இவைபோன்றும் இன்னும் மூலைக்குமூலை சரிவாகவும், சாய்ந்தும் எல்லாப் பக்கங்களிலும் செல்லும் அலைகள் உண்டாகின்றன. பூமியின் கீழ் ஏற்படும் சரிவுக்கு ஏற்ப அதிர்ச்சி அலைகள் எல்லாத் திசைகளிலும் ஓடிச் சில நாழிருக்குமிடமும் அடைகின்றன.

நாம் நிற்கும் பூமி மேலும் கீழுமோ அல்லது பக்கத்திற்குப் பக்கமோ அலைகிறது. சிறிய சரிவாயிருப்பின் அசைவின் அளவு சிறிதாயிருக்கும். இரும்புக் கம்பியின் நுனியிலுள்ள கல் மேலும் கீழும் சில விநாடிகை ஆடு

வதுபோல் இச்சிறிய அசைவு சில விநாடி பூமியை அலைத்து நிற்கும். அசைவின் அளவு பெரிதாயிருப்பின், அதிர்ச்சி அலைகள் வரும்வேகத்தில், பூமிக்கு அடியில் சமதரைக்குச் சமீபத்திலேயே கிடக்கும் உஷ்ண ஜலங்களும், அங்கே அமுங்கிக் கிடக்கும் கெட்ட வாயுக்களும் கிளம்பிப் பூமியைப் பிளந்துகொண்டு வெளியே வருகின்றன. சில சமயங்களில் இப்பூமிப் பிளவுகளில் வீடுகள், கிராமங்கள் மறைகின்றன. 1692-ம் வருஷம் போர்ட் ராயல் என்னுமிடத்தில் சம்பவித்த பூகம்பத்தில் பூமி வெடித்து, மனிதர்கள் சிலர் முழுவதும், சிலர் இடுப்புவரையும், சிலர் கழுத்துவரையும் பிளவுகளில் அகப்பட்டு, நாய்களுக்கும் நரிகளுக்கும் ஆகாரமாயினர் என்று குறிக்கப்பட்டிருக்கின்றது. இப்பொழுது ஜப்பானில் நடந்த பூகம்பத்தில் கட்டிடங்களெல்லாம் கீழே விழுந்து மனிதரைக் கொன்றதுந் தவிர, பூமியில் பெரிய வெடிப்புகள் ஏற்பட்டு, வெம்மை வாயுக்கள் வரும் வேகத்தினுல் தீயுண்டாகிச் சனங்களின் துன்பம் அதிகரித்தது.

பூகம்பங்கள் உண்டாவதற்குப் பூமியின் அடியில் உண்டாகும் சரிவுகளே காரணமெனச் சொன்னேம். இச்சரிவுகளும் அனேக காரணங்களால் ஏற்படுகின்றன. சமுத்திர ஜலம் கீழே போவதனுல் உண்டாகும் காரணம் ஒன்று. இன்னும் சில கூறுவோம். பூமியின் உள்ளே போகப் போக வெப்பம் அதிகரிக்கின்றது என்று கூறினேம். இவ்வுஷ்ணம் நாளடைவில் பூமியின் மேற்பரப்பின் வழியாய் வெளிக்கு வந்து கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைகிறது. இதன்பலனுகப் பூமியின் மொத்த உஷ்ணம் குறைந்து குளிர்ச்சி அதிகப்படுகின்றது. முன்காலத்தில் நாமிருக்கும் பூமியின் மேற்பரப்பு இப்பொழுது பூமியின் உட்புறத்தில்

இருப்பதுபோலவே உஷ்ணமாயிருந்தது. ஆனல் வரவர வெப்பம் குறைந்து குளிர்ச்சிபெற்றுத் தற்போதுள்ள நிலைமைக்கு வந்திருக்கிறது. இம்மாதிரியே பூமியின் உட்புறமும் குளிர்ந்துவருகிறது. வெப்பத்திற்குப் பொருள்களை விசாலப்படுத்துங் குணமும், குளிர்ச்சிக்குச் சுருக்குங் குணமும் உண்டாதலின், குளிர்ச்சி அதிகமாக ஆக பூமி சுருங்குகிறது. அவ்வாறு சுருங்குங்கால் பூமியின் உட்புறத்தில் சில பாகங்கள் சரிந்து ஒடுங்குகின்றன. இச்சரிவும் பூகம்பத்திற்கு ஒரு காரணமாகிறது.

மேலும், பூமிக்கு மேலே ஆகாய வெளியிலுள்ள காற்றின் தள்ளும் சக்தி, சில சமயங்களில் வெவ்வேறு காரணங்களாற் குறைவதுண்டு. இதன் பலனுகப் பூமியின் உட்புறத்திலுள்ள ரோவியின் தள்ளும் சக்திக்கும் வெளியிலுள்ள காற்றின் தள்ளும் சக்திக்கும் அதிக வித்தியாசம் ஏற்படும். அப்போது ரோவி எளிதில் வெளியே வரக்கூடுமாதலால் முன் விவரித்திருக்கும்வண்ணம் பூகம்பத்திற்குக் காரணமாகிறது.

இப்படியாக, பூகம்பங்கள் ஏற்படுவதற்கு அநேக காரணங்கள் உள. கட்டிடங்களின் சுவர்கள் பிளந்திருக்கும் மாதிரியினின்றும், அதிர்ச்சி அளவினின்றும் பூகம்பத்தின் உற்பத்திஸ்தானத்தைக் கண்டறியலாம். ஒரு பூகம்பத்தின் அதிர்ச்சி அளவையும், அது நீடித்திருக்கும் காலத்தையும் அதிதூரத்திலிருந்தே அறிவதற்குச் சாதனமான கருவிகளிருக்கின்றன. இக்கருவிகளின் மூலமாய்த்தான் ஜப்பானில் நடந்த பூகம்பம் அந்த நிமிடமே ஸிம்லாவில் தெரிந்தது. ஓர் இடத்திற் சம்பவிக்கும் பூகம்பத்தின்மாதிரியை ஆராய்ந்தறிவதன் மூலமாக அவ்விடத்தில் வீடுகள் எப்படிக் கட்டவேண்டுமெனத் தெரிந்துகொள்ளும் வழி இருக்கிறதாம். ஆகையால் இந்நாட்களில் பூகம்பத்தைப்பற்றி அறிய மிகவும் ஆவலுடனும் ஊக்கத்துடனும் அநேகர் தம் வாழ்நாட்களை அதற்கென்றே அர்ப்பணம் புரிகின்றனர்.

---

# CHILDREN'S CORNER

## BABY'S SONG

# பாப்பாப் பாட்டு

ஓடி விளையாடு பாப்பா—நீ
ஓய்ந்திருக்கலாகாது பாப்பா.
கூடி விளையாடு பாப்பா—ஒரு
குழந்தையை வையாதே பாப்பா.

சின்னஞ் சிறு குருவிபோல—நீ
திரிந்து பறந்து வா பாப்பா.
வன்னப் பறவைகளைக் கண்டு—நீ
மனதில் மகிழ்ச்சிகொள்ளு பாப்பா.

துன்பம் நெருங்கி வந்தபோதும்—நாம்
சோர்ந்து விடலாகாது பாப்பா.
அன்பு மிகுந்த தெய்வமுண்டு—துன்பம்
அத்தனையும் போக்கி விடும் பாப்பா.

சாதிகள் இல்லையடி பாப்பா—குலத்
தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்.
நீதி, உயர்ந்த மதி, கல்வி—அன்பு
நிறைய உடையவர்கள் மேலோர்.

உயிர்களிடத்தில் அன்புவேணும்—தெய்வம்
உண்மை என்று தானறிதல் வேணும்.
வயிரமுடைய நெஞ்சு வேணும்—இது
வாழும் முறைமை யடி பாப்பா.

சி. சுப்பிரமணிய பாரதி.

(*Selection from 'Pappa Pattu.'*

# தேசபந்துவின் சரித்திரம்.

தேசபந்து தாஸர் கல்கத்தாவில் 1870-ம் வருஷம் நவம்பர் மாதம் ஐந்தாந் தேதி பிறந்தார். பரம்பரையாகச் செல்வாக்கையும் அசாதாரணமான அறிவையும் பெற்றிருந்த ஒரு குடும்பத்திலேயே இவர் தோன்றினர். இவருடைய தகப்பனர் பாபுபூபன் மோகன தாஸர் கல்கத்தா உயர்தர நீதி மன்றத்தில் பிரசித்தி பெற்ற ஓர் அட்டர்னியாக இருந்தார். இந்தத் தொழிலில் இவர் மிகப் பிரசித்தி பெற்று அதிக பொருள் சம்பாதித்தார். ஆனல் தாம் சம்பாதித்த பொருளனைத்தையும் பிறர்க்கு உபகாரம் செய்வதிலேயே செலவழித்துவிட்டார். இந்த குணமே இவரது திருக்குமாரர் தேசபந்துவுக்கும் உதித்தது போலும். பாபு பூபன் மோகன தாஸர், அட்டர்னி உத்தியோகம் செய்ததோடு நில்லாமல், இரண்டு பத்திரிகைகளுக்கு ஆசிரியாகவுமிருந்தார். முதலில் "பிராமோ பப்ளிக் ஒபினியன்" என்ற பத்திரிகைக்கும் பிறகு "வங்காள பப்ளிக் ஒபினியன்" என்ற பத்திரிகைக்கும் இவர் ஆசிரியாக இருந்து அவைகளைத் திறமையுடன் நடத்திவந்தார். இவர் பிரம்ம சமாஜ இயக்கத்தில் சேர்ந்து அதி தீவிரமாக உழைத்தார். தமது ஏழை உறவினர்களுக்கும் பிறர்க்கும் தம்முடைய வருவாய்க்கு அதிகமாக உதவி செய்து வந்ததால், இவருக்

குக் கடன் ஏற்பட்டது. இதனால் இவர் இன்சால்வெண்டு கொடுக்கும்படி நேர்ந்து விட்டது.

* * * * *

பாபு பூபன் மோகனருடைய திருக்குமாரராக தோன்றிய சித்தரஞ்சன தாஸருக்குப் பல சகோதரர்களும் சகோதரிகளும் உண்டு. சகோதரர்களில் ஒருவரான ஸ்ரீமான் பி. ஆர். தாஸ் இதுகாலே பாட்னா உயர்தர நீதி மன்றத்தில் நீதிபதியாக இருக்கிறார். மற்றொருவரான ஸ்ரீமான் எஸ். ஆர். தாஸ் கல்கத்தாவில் அட்வொகேட் ஜெனரலாயிருக்கிறார். இவருடைய சகோதரிகளில் இருவர் ஒத்துழையாமை இயக்கத் தோற்றத்தின்போது தேசபந்துவுடன் சேர்ந்து உழைத்தது நேயர்களுக்கு ஞாபகமிருக்கும். இது நிற்க. தேசபந்து இளமையில் பவானிபூரிலுள்ள லண்டன் மிஷனரி கல்லூரியில் படித்தார். பிறகு கல்கத்தா பிரசிடென்சி காலேஜில் படித்து பி. ஏ. பட்டம் பெற்றார். பிறகு ஐ. சி. எஸ். பரீட்சைக்குப் படிப்பதற்காக இங்கிலாந்து சென்றார். அப்பொழுது தாதாபாய் நௌரோஜி, பார்லிமெண்டுக்கு ஓர் அபேட்சகராக நின்றார். அவருக்குச் சாதகமாக இவர் பல இடங்களில் உபந்நியாசம் செய்தார். பிறகு ஸ்ரீமான் ஜான் மக்லீன் என்ற ஒரு பார்லிமெண்டு அங்கத்தினர் ஒரு பிரசங்கத்தில் ஹிந்துக்களையும் முஸல்மான்களையும் தூஷித்துப் பேசினார். இதைக் கண்டித்து தேசபந்து தாஸர் எதிர்ப் பிரசங்கம் ஒன்று செய்தார். இதன்பயனாக ஸ்ரீமான் மக்லீன் என்ற அந்த அங்கத்தினர் மன்னிப்புக் கேட்டார். அவர் தமது காமன்ஸ் சபை அங்கத்தினர் பதவியையும் இழக்கவேண்டியதாயிற்று. பிறகு, பிரிட்டிஷ் பிரதமமந்திரியாக அப்பொழுதிருந்த ஸ்ரீமான் கிளாட்ஸ்டனுடைய தலைமையில் இவர் இந்தியா விஷயங்களைப்பற்றி ஓர் அரிய சொற்பொழிவு நிகழ்த்தினர். பிறகு இவர் பாரிஸ்டர் பரீட்

சைக்குப் படித்து அதில் தேறியதும் 1893-ம் வருஷத்தில் இந்தியாவுக்குத் திரும்பிவந்தார்.

* * * * *

கல்கத்தாவுக்கு வந்து சேர்ந்ததும் இவர் தமது பாரிஸ்டர் தொழிலை நடத்த ஆரம்பித்தார். ஆனால், இவர் தகப்பனார் இன்சால்வெண்டு கொடுத்தவராதலால் அஃது இவருடைய அபிவிருத்திக்கு ஒரு தடை யாகவே இருந்தது. ஆதியிலே பொது விஷயங்களில் தலையிட்டுக் கொள்ளாமலிருந்ததற்கு இஃதொரு முக்கிய காரணம் என்று கூறலாம். எனவே, தமது தகப்பனார்பட்ட கடனை எப்படியாவது தீர்த்துவிடுவதென்றும், தமது குடும்பத்திற்கு இன்சால்வெண்டு குடும்பம் என்றபெயரில்லாமற் செய்துவிடவேண்டுமென்றும் சங்கற்பம் செய்துகொண்டார். கல்கத்தா ஹைகோர்ட்டில் தமக்கு அதிகவரும்படி கிடைப்பதில்லையென்று தெரிந்து கொண்டதும், இவர் சிறிது காலம் வெளியூர்களுக்குச் சென்று அங்குத் தமது தொழிலை நடத்தி வந்தார்.

* * * *

கடைசியில் 1903-ம் வருஷம் பாபு அரவிந்தகோஷ் மீது அரசாங்கத்தார் வழக்குத் தொடுத்தனர். அவ்வழக்கில் இவர் பாபு அரவிந்தர் சார்பில் நியாய வாதியாக ஆஜரானார். இவருடைய திறமையான வாதத்தின் பயனாக பாபு அரவிந்தர் விடுதலை பெற்றார். இதற்குப் பிறகே சித்தாஞ்சனருடைய கீர்த்தி எங்கும் பரவலாயிற்று. மீண்டும் கல்கத்தாவிலேயே தமது வக்கீல் தொழிலை நடத்த ஆரமபித்தார். நல்ல வரும்படி கிடைக்க ஆரம்பித்தது. தகப்பனாருடைய கடனை ஒருதம்படிகூட இல்லாமல் தீர்த்துவிடுவதாகச் செய்து கொண்ட உறுதியை அநுபவத்திற்குக் கொண்டுவர ஆரம்பித்தார். சுமார் பதினாறுலட்சம் ரூபாய் கடனையும் தீர்த்துவிட்டபிறகு, இன்சால்வெண்டு

பந்தத்தினின்று தம்மை விடுதலை செய்யவேண்டுமென்று, தேசபந்துதாஸர் ஹைகோர்டில் மனுச்செய்து கொண்ட போது நீதிபதி பிளெட்சர் என்பவர், இன்சால்வெண்டா கப்போன ஒருவருடைய பழைய கடன்களை மீண்டும் ஒருவர் ஏற்றுக்கொண்டு அவைகளைத் திருப்பிக்கொடுத்து இன்சால்வெண்டு பந்தத்தினின்று நீங்கிக்கொள்வது இதுவே முதல் தடவை என்று பேசினார். இச்செய்கையினால் ஜனங்களுக்கு தேசபந்துவினிடத்தில் ஒரு நம்பிக்கையும் மரியாதையும் ஏற்பட்டன.

* * * *

இதற்குப்பிறகு ஸ்ரீமான் தாஸர் இலக்கியத்துறையில் தமது கவனத்தைச் சிறிதளவு செலுத்த ஆரம்பித்தார். 1915-ம் வருஷத்தில் "நாராயணா" என்ற ஒரு மாதப்பத்திரிகை ஆரம்பித்தார் மகாமகோபாத்தியாய ஹாரப்பிரசாத் சாஸ்திரி, விபின சந்திரபாலர் முதலிய அறிஞர்கள் இதற்குக் கட்டுரை எழுதிக்கொடுத்து வந்தார்கள். ஸ்ரீமான் தாஸருடைய குடும்பத்தைக் கவிஞர் குடும்பம் என்று கூறலாம். இங்ஙனமே தேசபந்துவும் புதிய துறையில் கவிகள் இயற்றுவதில் அபாரமான சக்தி வாய்ந்தவர். 1894-95-ம் வருஷத்தில் பல கவிகள் அடங்கிய "மலஞ்சா" என்ற ஒரு நூலை தேசபந்து தாசர் வெளியிட்டிருக்கிறார். இதற்குப் பிறகு வேறு பல நூல்களையும் வெளியிட்டிருக்கிறார். வங்காள இலக்கிய மகா நாட்டார் இவரை ஒரு வருஷத்தில் தமது தலைவராகத் தெரிந்தெடுத்தார். பிறகு அரசியல் துறையிலும் தலையிட்டு உழைக்க ஆரம்பித்தார்.

* * * *

தேசபந்துவின் தேசபக்தி மாசுமறுவற்றது; உண்மையானது. தமது சுயநலத்திற்காக அவர் தேசவேலையில் ஈடுபட்டதேயில்லை. அவருடைய திறமையும் தரும சிந்தனை

யும் அவரை முன்னுக்குக் கொண்டுவந்து விட்டன. அவர் ஒரு தீவிர காங்கிரஸ் வாதியாக இருந்தார். வக்கீல் தொழிலில் இவருக்கு ஏராளமான வரும்படி வந்துகொண்டிருந்த காலத்திலும் இவர் தேச சேவையைச் சிறிதும் மறக்கவில்லை. 1917-18-ம் வருடங்களில், அப்போதைய அரசியல் நிலைமையைப் பற்றி வங்காளமெங்கும் பல பிரசங்கங்கள் செய்திருக்கிறார். பெசண்டம்மையார் காப்பில் வைக்கப்பட்ட காலத்து, அதைப் பலமாகக் கண்டித்துப் பேசிய தலைவருள் இவரும் ஒருவர். பெசண்டம்மை காப்பில் வைக்கப்பட்டதைக் கண்டிக்க கல்கத்தா டவுன் ஹாலில் கூட்டுவதாக இருந்த ஒரு கூட்டம் அரசாங்கத்தாரால் தடுக்கப்பட்டது. அந்தத் தடை, தேசபந்து தாஸரின் முயற்சியினால் நீக்கப்பட்டது. 1917-ம் வருஷம் கல்கத்தாவில் கூடிய காங்கிரசில் சுய ஆட்சி தீர்மானத்தைப்பற்றி இவர் செய்த உபந்நியாசம் அனைவராலும் போற்றப்பட்டது.

* * * *

1919-ம் வருஷத்தில் நடைபெற்ற பஞ்சாப் படுகொலை இவருடைய உணர்ச்சியைத் தீவிரமாகக் கிளப்பிவிட்டதென்று கூறலாம். அப்படுகொலையைப்பற்றி விசாரிக்க காங்கிரசால் நியமிக்கப்பட்ட கமிட்டியில் இவர் ஓர் அங்கத்தினராக நியமிக்கப்பட்டார். இக்கமிட்டியார் மிகவும் சாதாரணமான எல்லாராலும் அங்கீகரிக்கப்படக்கூடிய சிபார்சுகளையே செய்தனர். ஆனால் அரசாங்கத்தார் இவைகளைக் கவனிக்கவில்லை. எனவே, சட்டசபைக்குள் சென்று ஒத்துழையாமை செய்யவேண்டுமென்று அமிருதசரஸ் காங்கிரசில் இவர் கூறினார். மகாத்மா காந்தி பூரண ஒத்துழைப்பே செய்ய வேண்டுமென்று கூறினார். கடைசியில் லோகமானிய திலகர் பரஸ்பர ஒத்துழைப்பு என்ற முறையைக் கையாள வேண்டுமென்று கூறினார். இதை இருவரும் அங்கீகரித்துக்கொண்ட

னர். பிறகு சுமார் ஆறுமாதங் கழித்து மகாத்மா காந்தி ஒத்துழையா இயக்கத்தைத் தோற்றுவித்தார். கல்கத்தாவில் லாலா லஜபதிராய் தலைமையில் கூடிய விசேஷ காங்கிரசில் ஒத்துழையாமைத் தீர்மானத்திற்கு மாருகத் தேசபந்து போராடிய போதிலும், காங்கிரஸ், அத்தீர்மானத்தை நிறைவேற்றிவிட்டபடியால் அதற்குத் தாம் கீழ்ப்படிய வேண்டுமெனக்கருதி 1921-ம் வருஷம் ஜனவரிமாதம் தமது வக்கீல் தொழிலை நிறுத்திவிட்டார். இவர் வக்கீலாயிருந்து சம்பாதித்த காலத்தில், அரசாங்கத்தின் அடக்கு முறைக்கு இரையானவர்களுடைய குடும்பங்களைக் காப்பாற்றி வந்தார். இன்னும் பலர்க்கும் பலவிதமான உதவிகளைச் செய்து வந்தார். இத்தகைய தரும சிந்தையுடையவர் திடீரென்று வக்கில் தொழிலை நிறுத்தியதும் பலர்க்கும் சங்கடம் ஏற்பட்டது. பிறகு 1921-ம்வருஷம் டிசம்பர் மாதம்தேசபந்துகைதி செய்யப்பட்டார். 1922-ம் வருஷம் பிப்ரவரி மாதம் ஆறு மாதம் தண்டனை விதிக்கப்பட்டார். இந்தத் தண்டனையைத் தேசத்தின் பொருட்டு இவர் சந்தோஷத்துடன் ஏற்றுக் கொண்டார்.

* * * * *

பிறகு 1922-ம் வருஷம் டிசம்பர் மாதம் கயை காங்கிரசில் இவர் தலைமை வகித்துச் செய்த உபந்நியாசத்தில் பிரிட்டிஷ் ஆட்சியினுல் இந்தியா எந்நிலையடைந்திருக்கிற தென்பதைப் பற்றி விரிவாகக் கூறினர். அதற்குப் பிறகே சுயராஜ்யக் கட்சி ஏற்பட்டது. காங்கிரஸிடத்தில் இவருக்கு அளவு கடந்த பக்தி இருந்ததனுல், காங்கிரஸின் ஓர் அமிசமாகவே சுயராஜ்யக் கட்சி இருக்கும்படி செய்தார். இவைகளைப்பற்றி இங்கு நாம் விரிவாகக் கூற வேண்டுவதில்லை. பிறகு வங்காள மாகாணச் சட்டசபையில் அங்கம் பெற்று, அங்கு இரட்டை யாட்சி முறையை எப்படியாவது ஒழித்து

விட வேண்டுமென்ற தீர்மானத்தை நிறைவேற்றினர். சென்ற வருஷம் பெல்காமில் நடைபெற்ற காங்கிரஸுக்கு இவர் விஜயம் செய்து அகில இந்திய புஸ்தகசாலை மகாநாட்டுக்குத் தலைமை வகித்தார்.

* * * * *

பெல்காம் காங்கிரசிலிருந்து திரும்பி வந்தவுடன் இவர் அதிக நோயாகப் படுத்துக்கொண்டார். பிறகு சிறிது காலம் ஒய்வாக இருக்கவேண்டி, பாட்னவில் தமது சகோதரருடன் தங்கியிருந்தார். சென்ற மார்ச்சு மாதம் நடைபெற்ற வங்காளச் சட்டசபைக் கூட்டத்திற்கு இவர் ஒரு நாற்காலியில் எடுத்துவரப் பட்டதும், இவர் பிரசன்னமாயிருந்ததன் பயனாக மந்திரிமார்களுடைய சம்பளம் நிராகரிக்கப்பட்டதும் நேயர்களுக்கு ஞாபகமிருக்கும். கல்கத்தா நகரசபையைச் சுயராஜ்யக்கட்சியார் கைப்பற்றியதும் இவர் மேயராகத் தெரிந்தெடுக்கப்பட்டார். சென்ற ஏப்ரல் மாதம் முதல் தேதி இவர் மீண்டும் ஒரு வருஷத்திற்கு மேயராகத் தெரிந்தெடுக்கப்பட்டார். சமீபத்தில் பரித்பூரில் கூடிய வங்காள மாகாண மகாநாட்டுக்குத் தலைமை வகித்தார். இதற்குப்பிறகு இவர் டார்ஜீலிங்குச்சென்று ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தார். இங்கே எவரும் எதிர்பாராதிருக்கும்போது திடீரென்று ஆண்டவன் திருவடி நீழலில் சேர்ந்தார்.

* * • * *

தேசபந்துதாஸர், தமது நாட்டிற்காகப் பொன்னைக் கொடுத்தார்; பொருளை விடுத்தார்; சுகபோகங்களைத் துறந்தார்; தமது தொழிலை உதறித்தள்ளினர்; கடைசியில் தமது உயிரையும் தேசத்திற்காக விட்டார். தேசபந்து தாரகேஸ்வர சச்சரவின்போது நடந்துகொண்ட பான்மையையும் அப்பொழுது அவர் பேசிய வீரமொழிகளையும் எவரும் மறந்துவிடமாட்

டார். தேசபந்து தம்முடைய அரிய மாளிகையையும் தேசத்தின் பொது உபயோகத்திற்காகவே அர்ப்பணம் செய்துவிட்டார். இது சம்பந்தமாக மகாத்மா காந்தி, சமீபத்தில் கல்கத்தாவில் செய்த ஓர் உபந்யாசத்தில் பின்வருமாறு கூறினர் :—

“(தேசபந்துவின் வாசஸ்தலமாயிருந்த) ரஸ்ஸாரோட் 148-வது எண்ணுள்ள இல்லத்தில் நான் இன்று எவ்வளவு துக்கத்துடன் நுழைந்தேன் என்பதை உங்களுக்கு முன்னர்க் கூறியிருக்கிறேன். அந்த வீடு இனி தேசபந்துவின் வாசஸ்தலமாயிராது என்று தெரிந்துகொண்டேன். பொதுஜன உபயோகத்திற்காக அதைச் சில டிரஸ்டிகளிடம் அவர் ஒப்புவித்துவிடத் தீர்மானித்திருக்கிறுர் என்பது எனக்குத் தெரியும். ஆனல், உலகப்பற்றுள்ள ஒரு மனிதன் என்ற முறையில் நான் அந்த மாளிகையில் நுழையும்போது, அதனுடைய சொந்தக்காரர் தாமாகவே அதைத் துறந்து விட்டார் என்ற எண்ணத்துடன் பிரவேசிக்கும்போது, என் கண்களில் நீர் பெருகியது.”

* * * * *

தேசத்திற்குப் பந்துவாயிருந்த தாஸர் தேசத்திற்காகவே இருந்தார் ; தேசத்திற்காகவே இறந்தார். அவர், சிறைக்குச் செல்லு முன்னர்க் கூறிய கீழ்கண்டமொழிகள் எவருக்கும் ஒரு புத்துணர்ச்சியைக் கொடுக்கும் என்பதில் ஐயமில்லை. “என் மணிக்கட்டுகளில் கைவிலங்குகள் இருப்பதை நான் உணர்றேன். என் தேகத்தில் இருப்புச் சங்கிலிகள் பிணிக்கப்பட்டிருக்கிறதை நான் அறிகிறேன். இதுவே பந்தத்தின் துயரம். இந்தியா முழுவதும் ஒரு பெரிய சிறைச்சாலை. காங்கிரஸ்வேலை எப்படியாவது நடைபெற வேண்டும். நான் சிறைக்கு உள்ளேயிருந்தாலென்ன? வெளியே யிருந்தாலென்ன? நான் உயிருடன் இருந்தாலென்ன? இறந்து போனலென்ன?” (ந. ச.)

---

# வ. வெ. சு. ஐயர்.

அறிவிற் சிறந்த வ. வெ. சு. ஐயர் திரிசிராப்பள்ளி வரக னேரியில் அந்தண குலத்தில் பிறந்தவர். அவர் இளமையில் கல்வி பயின்றவர் ; நல்லறமாம் இல்லறத்தை ஒழுங்குபெற நடாத்தினவர். ஐயர் பாரிஸ்டர் பரீட்சையில் தேறவேண்டு மெனும் விருப்பங்கொண்டு இங்கிலாந்து சென்று ஆண்டு வதிந்தபோது, ஒருநாள் அவண் நிகழ்ந்த ஒரு கொடுங்கொலை காரணமாக அவர் பிரிட்டிஷ் எல்லை கடந்து பிரான்சு போக நேர்ந்தது. பின்னை ஐயர் பிரான்சு விடுத்துப் புதுச்சேரி குடி புகுந்து பல்லாண்டு ஆங்கு மனைவி மக்களோடு வாழ்ந்து வந் தார். அவ்விடத்திலுறைந்த நாளில் அவர் தமிழ் நூல்களை ஆராயத் தொடங்கினர். தமிழ்நேயர் திருவள்ளுவர் திருக் குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார் ; கம்பராமாயணம்-பாலகாண்டச் சுருக்கம் புதுமுறைப்படி பதிப்பித்தார். அரசர் பெருமான் சீர்திருத்தத்தை யொட்டி அறிக்கை பிறப்பித்த போது "தேசபக்தன்" பத்திரிகை இடையீடின்றி நிகழ்த்தி வந்த கிளர்ச்சியின் பயனாகவும், ஸ்ரீ நரசிம்ம ஐயர் போன்றார் சட்டசபையில் செய்த முயற்சியின் பயனாகவும், வேறு பல காரணங்களானும் ஐயர் புதுவையினின்றுஞ் சென்னை போந் தார். போந்த சில காலத்துக்குள் "தேசபக்தன்" ஆசிரியர் பதவி யேற்க நேர்ந்தது. ஓராண்டு அப்பத்திரிகை வாயிலாகக்

காந்தியடிகள் தெய்விக இயக்கத்துக்குச் சார்பாக அவர் தொண்டு செய்ததின் பயனாக அவர் ஒன்பது மாதகாலம் அரசர் பெருமான் விருந்தினராகவுஞ் சிறைக்கோட்டம் புகுந்திருந்தார். சிறையில் அவர் கம்பராமாயணத்தில் பல பகுதிகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். சிறையினின்று வெளிப்போந்தவுடன் தமிழ் நாட்டில் ஒரு குருகுலங் காண முயன்று அம்முயற்சியின் பயனாகச் சேரமான்தேவியில் தமிழ்க் குருகுலமொன்று அமைத்தார். இப்பொழுது 'பாலபாரதி' என்னும் ஒரு தமிழ் மாதப் பத்திரிகையும் இவர் முயற்சியால் நடைபெறுவதாயிற்று.

ஐயர் ஆங்கிலத்தில் புலமை வாய்ந்தவர்; வேறு சில மொழிகளுந் தெரிந்தவர். பழைய வழக்க ஒழுக்கங்களை நாட்டில் நிலைபெறச் செய்ய வேண்டுமென்பதில் ஐயருக்கு வேணவா உண்டு. தமிழ் மக்களை வீரர்களாகச் செய்ய வேண்டுமென்று பலவழியிலும் ஐயர் முயன்று வந்தார். ஐயர் கடைசிகாலத்தில் தமிழ் நாட்டில் ஒரு புது சமயம் உண்டுபண்ண வேண்டுமென்பதில் கருத்துச் செலுத்திவந்தது அவரது நண்பர் சிலர் அறிவர். அவ்வெண்ணத்தோடு சேவை செய்துவரும் நாளில் ஐயர் கல்யாண தீர்த்தத்தில் மூழ்கினர்.

தமிழ்நாடு ஒரு தவப்புதல்வரையிழந்தது; கம்பன் தன் நண்பர் ஒருவரை யிழந்தான்; நாம் ஒருயிர்த்தோழரை யிழந்தோம். (ந. ச.)



PRINTED AT THE B. N. PRESS, MOUNT ROAD, MADRAS.

க்தால், இபமலோகத்திலிருந்து திரும்பி வந்தவர் களைக் கண்டு சந்தோஷப்படுபவர்கள் போலிருந்தது.

கலியாணி அம்மாள் :—ஏனப்பா குழந்தாய் இவ்வளவு நாழிகை? உன் தங்கை நீ போனதுமுதல் அழுதுகொண்டே இருக்கிறாள். உங்கள் அப்பா இப்பொழுதுதான் சாப்பிட்டுவிட்டு, நீயும் இளவாச ரும் வந்துவிட்டீர்களா என்று விசாரிக்கச் சென்றார் கள். சந்தியாவந்தனமெல்லாம் ஆகிவிட்டதுபோ லிருக்கிறதே. சாப்பாடும் ஆகிவிட்டதோ?

அனந்தராமன் :—“இல்லையம்மா! இன்னமும் சாப்பிடவில்லை. விளக்கு வைக்கு முன்னாகவே வந்துவிடுவேன். ஆனால், வழியில் ஆறுமுகநேரிக் குப் பக்கத்தில் வரும்பொழுது, என்னையும் இளவா சரையும் எங்கள் ஆறுமுகநேரித் தோழன் கண்டு கொண்டான். உடனே வண்டியை நிறுத்திப் பேசிக் கொண்டிருந்தோம். அதில் அதிக நேரமாய்விட்டது. இப்பொழுதுதான் வந்தோம். வந்ததும் சந்தியாவந்த னத்தை முடித்துக்கொண்டு வந்தேன். சீதா! நீ சாப்பிட வேண்டுமா? அல்லது விரதம் இருக்கப் போகிறாயா?

சீதாலக்ஷ்மி :—“நீ வயிறு நிரம்ப சாப்பிடும் பொழுது எனக்கேன் விரதம்?”

எனவே, இருவரும் சாப்பிட்டு இரவு முழுவ தும் நன்றாய்த் தூங்கினார்கள்.

மறுநாட் காலையில் பெருந் தவசி போன்ற ஒரு வர், கழுத்திலிருந்து பாதம்வரை ஏகமாகத் தரித்த காவி உடையும், இடையிடையே ஒவ்வொரு மயிர்

நரைத்த தாடியும் ஜடாபாரமும், நெற்றியில் திருநீ றணிந்து, கையில் ஜெபமாலை யொன்றை வைத்து, வாய் ஏதோ மெதுவாக உச்சரிக்க, ஒவ்வொரு மணி யாய்த் தள்ளிக்கொண்டு, மேல வீதியிற் போய்க் கொண்டிருந்தார். தன் வீட்டின் முன் நின்றுகொண் டிருந்த அனந்தராமன், அவரை நமஸ்கரித்து நின் ருன். அவனைக் கண்டதும் அம்மஹானின் முகத் தில் ஒருவித ஆச்சரிய பார்வை உண்டாக, அப்ப டியே நின்றுவிட்டார். அனந்தராமனுக்கும அப் பெரியாரிடத்தில் ஒருவிதப் பற்றுதல் உண்டா யிற்று. பின் அவர் அனந்தராமனை ஆசீர்வதித்து, விபூதி யெடுத்து ஒரு பஞ்சாக்ஷரம் சொல்லி அவன் நெற்றியிலணிந்து, "குழந்தாய்! உன் பெய ரென்ன?" என்ருர்.

அனந்தராமன் :—"ஸ்வாமி! என் பெயர் அனந்த ராமன். தாங்கள் நிற்கின்றீர்களே இப்படி உட்காருங் கள்."

என்று சொல்ல, அவர் அப்படியே கூடத்திலுட் கார்ந்தார்.

பெரியவர் :—"அப்பா! உன் தந்தையின் பெய ரென்ன? அவர் சௌக்கியமாய் இருக்கிருரா?"

அனந்தராமன் :—"சங்கராமஐயர் என்பதே என் தந்தையின் பெயர். சௌக்கியமாயிருக்கிருர்."

என்று சொல்லிக் கொண்டிருக்கும்பொழுது வெளியே சென்றிருந்த சங்கராமஐயர் வந்து, அப் பெரியவரை நமஸ்கரிக்க, பெரியவரும் பிரதி நமஸ்க ரித்து, "தாங்கள்தான் சங்கராமஐயரோ?" என்ருர்.

சங்கரராமஐயர் :—"ஆம்; அதுவே அடியேனின் பெயராகும். ஸ்வாமிக்கு எப்படித் தெரியும்?"

பெரியவர் :—"உட்காருங்கள். அனந்தராமா! நீயும் உட்கார். அனந்தராமன் தான் தங்கள் பெயரைச் சொன்னான். அதோடு அடியேனுக்கும் தங்களைச் சிறு வயது முதல் தெரியும்."

சங்கரராமஐயர் :—"தங்கள் சொந்த ஊர் சமீபந்தானோ?"

பெரியவர் :—"நான் பிறந்தது இந்த ஊரே. தாங்களே என் அத்தியந்தநேசர். இதோ இருக்கும் அனந்தராமனே என் புத்திரன்."

எனவும், சங்கராமஐயர் எழுந்து அம்மஹானின் கழுத்தைக் கட்டிக்கொண்டார். அனந்தராமன், ஒன்றும் அறியாதவனாய் விழித்துக்கொண்டு நின்றான். துறவிகளுக்கு எந்த ஊரும் சொந்த ஊரே; யாவரும் சொந்த மக்களே என்பதாயிருந்தாலும், அதனால் தன் தகப்பனார், அவர் கழுத்தைக் கட்டிக்கொள்ள வேண்டியதில்லையே என நினைத்துக்கொண்டிருந்தான். அப்பொழுது சங்கராமஐயர், "அனந்தராமா! இதுவரையும் என்னையே உன் தந்தையென்று நினைத்தாயே; ஆனால், இவரே உன் உண்மையான தந்தை: இவரை நமஸ்காரஞ் செய்துகொள்" என்று கூறவும், அனந்தராமன் அம்மஹானின் காலில் வீழ்ந்து நமஸ்காரஞ் செய்தான். அவர், அவனைத் தூக்கி நிறுத்தித் தழுவிக்கொண்டு, "குழந்தாய்! என் செல்வக்குழந்தாய்! சரஸ்வதி பெற்ற செல்வமே! உட்கார்." என்று தன் பக்கத்தில் உட்கார

வைத்துக் கொண்டார். இவர் யாரென, வாசிப்பவர்களை மேலும் சந்தேகத்திலாழ்த்தாமல் வெளியிடுவோமாக.

அனந்தராமனுடைய தந்தையென்று நினைத்து வந்த சங்கராமனையரும், இப்பொழுது வந்திருக்கும் மஹானுகிய அனந்தராமனுடைய தந்தையும் சிறு வயதுமுதல் இணைபிரியாத அத்தியந்த நண்பர்கள். அனந்தராமன் தந்தையின் பெயர் எக்ஞேசையர். இவருடைய பதினெட்டாவது வயதில் இவருக்கு, இப்பொழுது ஸ்ரீ வைகுண்டம் என்று சொல்லப்படும் கைலாசபுரம் சிவன்கோவில்தெரு கிருஷ்ணசாமி ஐயர் புதல்வி சாஸ்வதியை விவாஹம்செய்திருந்தது. கலியாணமான மறுவருஷத்தில் சாஸ்வதி அம்மாள் புஷ்பவதியாக, மறுமாதத்தில் சாந்திக்கலியாணஞ் செய்யப்பட்டது. இருவரும் வெகு சந்தோஷமாக வாழ்ந்து வரும்பொழுது, நான்கு வருஷங்கள் கழிந்த பின்னர், சாஸ்வதியம்மாள் கர்ப்பவதியானுள். பின், வளை காப்படுக்கிக்கொள்ள அவள் பெற்ருேர் அவளை கைலாசபுரத்திற்கு அழைத்துக்கொண்டு போனுர்கள். அப்பொழுது பிறந்த குழந்தைதான் அனந்தராமன். அவன் பிறந்த மூன்று மாதங்களுக்குப்பின், அம்மாளுக்கு ஒரு வியாதி உண்டாயிற்று. அதனுல் ஒரு மாதம்வரை கஷ்டப்பட்டுப் பின்சிறிது சிறிதாய் பூரண சுக ஸ்திதிக்கு வந்தாள். ஒரு நாளிரவு, யாவரும் தூங்கிக்கொண்டிருக்கும்பொழுது திடீரென்று ஒரு சத்தங்கேட்டு எழுந்த எக்ஞேசையர் விளக்கைப் பொருத்தினுர். ஐயோ ! என்ன சொல்ல ! அந்த

ஜகதீசனுக்கே பிரீதி! கேவலம், இந்த மானிட ஜன்மத்தினுல் என்ன சுகம்! நம் சரஸ்வதி அம்மாள் சிவலோகப் பிராப்தியானுள். "அடீ என் கண்மணி! என்னைவிட்டுப் போய்விட்டாயோ? என்னைச் சோதிக்கவே இப்படியிருக்கிருயோ? என் செல்வமே! என் உயிரே! உயிர் நிலையே! என் கற்பகமே! ஏழை நான் தாங்கமாட்டேனடீ! ஆருயிரே! எழுந்திரு" என்று கதறினர். அடுத்த வீட்டுக்காரர்கள் வந்து கூடினர்கள். எக்ஞேசையர் அடிக்கடி விழுந்து மூர்ச்சித்தார். அவருக்கு வைத்தியம் பார்க்கவேண்டியதாயும் ஏற்பட்டது.

[நாம், மானிட ஜன்மம் எடுத்ததின் பலனுக, நாம் செய்த பாவங்களுக்கு, இறந்தபின் நரகமனுபவிப்போமென்று பலரும் சொல்லுகின்றனர். செய்த பாவங்களுக்குத்தக்க தண்டனை யடைந்துவிட்டால் மறுஜன்மம் வேண்டியதில்லை. நாம் செய்த புண்ணிய பாவங்களுக்குரிய பலன்களை நாம் இறக்கும் முன்னரே அனுபவித்து, எஞ்சிய பாவங்களுக்கே மறுஜன்மமெடுக்கிருேம். இதேயன்றி சுவர்க்கமென்றும் நரகமென்றும் தனியாக அனுபவிக்கப் போவதில்லை. இதுவே எமது துணிபு. புண்ணிய ஆத்மாக்கள், சிவனுள் ஐக்கியமாகிவிடுவர்.

நாம் செய்த பாவங்களுக்குத் தண்டனையாக, பலர் காயத்தினுல் * துன்பமனுபவிப்பார்கள். பலர் மனத்துயரினுல் கஷ்டமனுபவிப்பார்கள். ஒருவனுக்குப் பத்து சகோதரர்களிருந்தால், அதை ஒரு

* காயம்=உடல்.

பெரும்பாக்கியம் என்றெண்ணுகிறான். அப்பத்து சகோதரர்களும் மிகுந்த ஐக்கியமாயிருப்பின், அதை, அதிலும் பெரிய பாக்கியமென்றெண்ணுகிறான். பின் ஒவ்வொருவனாக இறக்க, அதன் துயரைச் சகிக்கவேண்டியவனாகவு மிருக்கிறான். ஞானிகளாயுள்ளோர்மட்டும் இன்ப துன்பமில்லாதிருப்பர். கலியாணம் வந்ததென்று சிரிக்கப் போகிறதுமில்லை. கல்லெடுப்பு வந்ததென்று அழப்போகிறதுமில்லை. நாம், மனதினால் துன்ப மனுபவிப்பதாவது—தனக்குத் தெரிந்தோ ரிறந்தால் அதைச் சகிக்கொணாது துயருண்டாகிறது. தான் ஏழையாயிருப்பது பற்றி மனத்துயருண்டாகிறது. பிறன் வாழ்வது மனம் பொறாத மனத்துயர். எண்ணிய காரியம் முடியாதது பற்றி வருத்தம். ஒருவர் நோயுற்றிருப்பதுபற்றி வருத்தம்-இப்படி எவ்வளவோ இருக்கின்றன. நாம் அனுபவிக்கும் துன்பம் அதிகமாய் மனக்குறங்குடனேயே. காய துன்பத்தினால் மனத்துன்பமும், மனத்துன்பத்தினாற் காய துன்பமும் நேரிடுதல்கூடும். இவ்விதமான அவஸ்தைகள் அனுபவித்த பின்னர்தான் பிராணாவஸ்தை நேரிடும். உயிர் பிரியும் பொழுது வெகுலேசாக, யாதொரு கஷ்டமுமின்றிப் போய்விடுமென்று பலர் எண்ணுகிறார்கள். உயிர், அதிகக் கஷ்டமடைந்தாலன்றி பிரியாதென்றுதான் எமது அபிப்பிராயமிருக்கிறது. ஒருவன், தன் உயிரைப் போக்கிக் கொள்ள வேண்டுமாயின், தூக்குப் போட்டுக் கொள்கிறான், அல்லது ஜலத்தில் விழுந்து விடுகிறான், அல்லது வேறு ஏதாவது ஒன்று செய்து கொள்ளுகி

ளுன். அதனுல் எவ்வளவோ அவஸ்தைப்பட்ட பின்னரே உடலைவிட்டு உயிர் நீங்குகிறது. அப்படி அவஸ்தைப்படும் பொழுது, தன்னை யாரேனும் காப்பாற்ற மாட்டார்களா என்ற எண்ணம் அவனுக்கு உதிக்குமென்பது நிச்சயம். 'என்னடா! பெரிய பிராணுவஸ்தையாயிருக்கிறதே' என்று சாதாரணமாகச் சொல்லக் கேட்கிறேம். அதிலிருந்தே, பிராணன் நீங்க பெரும் அவஸ்தைப்படவேண்டியதிருக்கிறதென்பது தெரிகின்றது. வெட்டு ஒன்று துண்டிரண்டாக ஆகும்படி வெட்டினுலும், அந்த உடல் எவ்வளவு துடிக்கிறது. எவ்வளவு கஷ்டமனுபவித்து உலகத்தை வெறுத்திருப்பவர்களுங்கூட, தம் உயிரை விட்டுவிட பெரும்பாலும் விரும்புவதில்லை. அதற்குக் காரணம், உலக ஆசையென்றும் உலகத்தில் அவ்வளவு சுகம் இருக்கிறதென்றும் சிலர் கருதுகின்றனர். தான், முன் ஜன்மத்தில் பிராணுவஸ்தை யனுபவித்தது, தன்னை அறியாமலே ஆன்மாவுக்கு ஞாபகம் உண்டாகியே, இன்னமும் அத்தகைய அவஸ்தை அனுபவிக்க விரும்பாததாகிறது. இதைப்பற்றி விபரமாய்ச் சொல்ல எவ்வளவோ தோன்றுகிறது. ஆனுல் கதைக்குச் சம்பந்தமில்லாததைப்பற்றிச் சொல்லுவதில் வாசிப்போருக்கு வெறுப்பு உண்டாகுமென்று நிறுத்தப்பட்டது.]

எக்ஞேசஷையர் பட்ட வருத்தத்திற்கு அளவில்லை. மறுநாட்காலையில் தகனகிரியைகள் நடந்தன. இருபதுநாட்கள் கழிந்தவுடன், எக்ஞேசஷையர்,

தன் குழந்தையைக் கையில் தூக்கிக்கொண்டு சங்கர ராமஐயரிடம் வந்து, "என் தோழா! நீ எனக்கு ஆப்த நண்பனாகில் என் குழந்தையைப் பார்த்துக் கொள். என் சாஸ்வதி போனபின் இங்கு ஒன்றும் எனக்கு வேண்டியதில்லை. இன்று முதல் குழந்தைக்கு நீயே பிதா; உன் மனைவியே தாய். குழந்தையை நன்றாய் ஆதரித்துவா. குழந்தைக்கு என்னென்ன செய்யவேண்டுமென்று நான் சொல்ல வேண்டியதில்லை. நான், இன்று முதற் பரதேசி, பல க்ஷேத்திரங்களுக்குப்போய்சுவாமியைத்தரிசித்து எங்கேயோ கழித்துவிடப்போகிறேன். நீ என்னைக்கட்டாயப்படுத்காதே. போகக்கூடாதென்று தடுப்பாயாகில் நான் தூக்குப்போட்டுக்கொண்டு உயிரை விடுவேன். சாஸ்வதி போய்விட்டாள். இனி நான் அப்படித்தான் செய்வேன். சங்கரராமா! குழந்தைக்கு உன்னைத் தவிர வேறு தாய் தகப்பனிருந்ததாகத் தெரிய வேண்டாம். நீயே அதற்கு சர்வமும். சாஸ்வதி, குழந்தைக்கு அனந்தகிருஷ்ணனென்று பெயர்விட எண்ணங்கொண்டிருந்தாள். அவள் இஷ்டப்படி, 'அனந்த' என்னும் முதல் பதத்தையும், நீ எனக்கு ஆருயிர் நண்பனாயிருக்கிறதினால், என் இஷ்டப்படி, உன் பெயரின் கடைமொழி 'ராமன்' என்பதையும் சேர்த்து 'அனந்தராமன்' எனப் பெயர் கொடு. நான் அநேகமாக இனி இங்கு வரமாட்டேன். நான் சொல்லியபடி செய்வதாக வாக்குக்கொடு" என்று சங்கர ராமஐயரிடமும் அவர் மனைவி கலியாணி அம்மாளிடமும் உறுதிபெற்றுக் கொண்டுபோய் விட்டார். என